Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 32—No. 8

Acc. No. 33778

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்கட னடியே னையுந் தாங்குதல்
என்கட னுப்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி ஆவணி 1959 ஆகஸ்டு | இதழ் 8

உள்ளுறை

பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனி பிரதி அணா 4

### சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்

# சமய வெளியீடுகள்

| | ரூ.ந.பை |
|---|---|
| திருமந்திரம்—2 பகுதிகள் —சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை அவர்கள் விளக்க உரையுடன் | 18-00 |
| அகத்தியர் தேவாரத் திரட்டு —கயப்பாக்கம்-சதாசிவச் செட்டியார் உரை | 3-50 |
| சிவஞானபோதச் சிற்றுரையும் விளக்கமும் —ப. இராமநாத பிள்ளை | 5-00 |
| சிவஞானபாடியம் —உயர்ந்த பதிப்பு | 5-00 |
| திருவிளையாடற்புராணம் —மதுரைக் காண்டம், நாட்டார் உரையுடன் | 9-00 |
| பெரியபுராணம் —சுந்தரர் வரலாறு | 3-50 |
| பெரியபுராணம் —திருநாவுக்கரசர் வரலாறு | 3-25 |
| சிவஞானபோதப் பொழிப்புரை —கா. சுப்பிரமணிய பிள்ளை | 0-75 |
| திருவாசக விரிவுரை —மறைமலையடிகள் | 6-00 |
| சோமசுந்தர நாயகர் வரலாறு —மறைமலையடிகள் | 2-25 |
| மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் —மறைமலையடிகள் | 18-00 |

| | ரூ.ந.பை |
|---|---|
| தேவார ஒளிநெறிக் கட்டுரை | |
| —அப்பர் | 4-50 |
| —சம்பந்தர் | 5-00 |
| தணிகைமணி, வ. சு. செங்கல்வராய பிள்ளை | |
| திருவிளையாடல் வசனம் | 4-00 |
| கந்தபுராண வசனம்—சு. அ. இராமசாமிப்புலவர் | 5-00 |
| கம்பராமாயண வசனம் —சு. அ. இராமசாமிப் புலவர் (இருபகுதிகள்) | 10-00 |
| வில்லிபாரத வசனம் | 5-00 |
| சீவகசிந்தாமணி வசனம் | 6-25 |
| சிவன் —ந. சி. கந்தையா | 1-00 |
| தமிழர் சமயம் —கா. சுப்பிரமணிய பிள்ளை | 2-00 |
| சிவஞானசித்தியார் ஆராய்ச்சி —ந. சிவகுருநாத பிள்ளை | 1-75 |
| பிள்ளைத்தமிழ்க் கொத்து | 5-00 |
| மணிவாசகப்பெருமான் வரலாறு | 1-75 |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு | 2-25 |
| அப்பர் சுவாமிகள் வரலாறு | 1-75 |
| சேக்கிழார் சுவாமிகள் வரலாறு | 1-50 |
| தாயுமான சுவாமிகள் வரலாறு | 2-25 |

---

விரிவான பட்டியலுக்கு எழுதுங்கள் ;

**திருநெல்வேலித் தென்னிந்திய**

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,**

***1/140, பிராட்வே, சென்னை-1***

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

| மலர் 32 | விகாரி ஆவணி 1959 ஆகஸ்டு | இதழ் 8 |
|---|---|---|

## அளவை இயல்

முருகவேள்

(மலர் 32 ; இதழ் 5 ; 172 -ம் பக்கத் தொடர்ச்சி)

"ஈண்டு பக்கப் போலிநான் கேதுப் போலி யொருமூன்றாய்
வேண்டு மெழுமூன் றாகும்விளங் குவமைப் போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண் டிருபத் திரண்டாங் கருதிலிவை
யாண்டு மொழிவ ரவையெல்லா மளக்கி லறுபத் தைந்தாகும்"

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுள், அளவையியற் பகுதியில் மிகவும் முதன்மையான தாகும். தருக்க நூலின் விரிந்த பொருள்கள் பலவும் இதன்கண் சுருங்கத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. எனவே, இச் செய்யுள் சித்தாந்த நூல்களைத் தொடக்க நிலையிற் பயிலுவோர்க்குப் பெரிதும் மயக்கம் விளைத்து நிற்கும் தகையதாகும். பொருளுணர்ச்சியமைபச் சொற்களைப் பிரித்துப் படிப்பது தானும் இயலாமல் 'குன்றின் முட்டிய குரீஇப் போல' மாணவரை இடர்ப்படச் செய்வது இச் செய்யுள். உரையாசிரியர்கள் பலரும் இச்செய்யுட் பொருளைப் போதிய அளவு தெளிவுற விளக்காமலே விடுத்துப் போயினர். ஆசிரியர் சிவாக்கிரயோகிகள் இச்செய்யுட் பொருளை விரிவாகவும் தெளிவாகவும் விளக்கியுள்ளனராயினும், வடமொழிக் கலப்பும் மேற்கோள்களும் மிக விரவி நின்று மிகக் கற்றுணர்ந்த ஒரு சிலருக்கே பயன் படுவதாக உள்ளது.

வடநூற் பொருள்களைத் தெளிதீந் தமிழிற் செவ்விதின் விளக்கவல்ல சிறப்புடையாராய சிவஞானசுவாமிகள், இதனை விரிவாக விளக்கி யிருப்பாராயின், நமக்குப் பெருநலம் விளைந்திருக்கும். அவர் அங்ஙனம் செய்திலாமையால், " வடநூற்கடலை நிலைகண்டு அறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரை செய்தாராயின், இன்னோரன்ன பொருள் அனைத்தும் தோன்ற ஆசிரியர் கருத்துணர்ந்து உரைப்பர். அவர் சொல்லதிகாரம் போலப் பெரும் பயன்படாமை கருதி எழுத்திற்கு உரை செய்யாது ஒழிந்தமையின், தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியரை யுள்ளிட்டோர் உரையை ஆசிரியர் கருத்தாகக் கொண்டு பின்னுள்ளோரும் மயங்குவராயினர் என்பது'' என மாதவச் சிவஞானசுவாமிகள் தொல்காப்பியச் சூத்திரவிருத்தியின்கண் குறிப்பிட் டருளி யிருப்பதனை நினைவுகூர்ந்து, ஈண்டு நாமும் "வடநூற்கடலை நிலை கண்டுணர்ந்த மாதவச் சிவஞானமுனிவர் இச்செய்யுட்கு விரிவாக உரை வகுத்திருப்பாராயின், தருக்கநூற் பொருள் அனைத்தும் தக்காங்கு விளங்கத் தெளிதீந் தமிழிற் றெருட்டி யிருப்பரே!..." என எண்ணி எண்ணிக் கழிவிரக்கம் கொண்டு கலங்க வேண்டியுள்ளது! இஃதெங்ஙனமாயினும், இயன்ற அளவின் முயன்று இச்செய்யுட் பொருளை ஒரு சிறிதேனும் ஆராய்ந்து காண்போம்:

" ஈண்டு பக்கப் போலிநான்கு; ஏதுப்
போலி ஒருமூன்றாய்*
வேண்டும் எழுமூன் றாகும்; விளக்கு
உவமைப் போலி ஈரொன்பான்
காண்டுப்; தோல்வித் தானம் இரண்டு
இருபத் திரண்டாம்; கருதில்இவை
†யாண்டும் ஒழிவர்; அவையெல்லாம் அளக்கில்
அறுபத் தைந்தஆகும்.''

---

* 'ஒரு மூன்றும்' எனவும் முன்பு சில பதிப்புகளில் இருந்தது.

† 'யாண்டும் மொழிவர்' எனவும், 'ஆண்டு மொழிவர்' எனவும் சிலர் பிரிப்பர். சிவாக்கிரயோகிகள் 'ஆண்டு மொழிவர்' என்றே பிரித்துள்ளார். 'ஆண்டு' என்பதனை 'ஆராய்ந்து பார்த்து' என்னும் பொருட்டாகக் கொண்டனர் போலும். ஈண்டுக் கூறப்பெறுவன

இச் செய்யுள் அனுமான அளவையின்கண் நிகழக் கூடிய குற்றங்களைத் தொகுத்துக் கூறுகின்றது. 'ஈண்டு' என்றது அனுமான அளவைக்குரிய துணையாவனவற்றை. 'பக்கப் போலிகள் நான்கு, துணியப்படாதது (அசித்தம்) மறுதலைக்கப்படுவது (விருத்தம்) ஒருதலைப் படாதது (அநைகாந்திகம்) என மூன்று வகைப்படும் ஏதுப்போலிகள் இருபத்தோன்று, உவமைப் போலிகள் பதினெட்டு, மயங்கப் பேசுதல் (அப்பிரதிபத்தி) வாளாதிருத்தல் (விப்பிரதிபத்தி) என இருவகைப்படும் தோல்விநிலைகள் இருபத்திரண்டு. ஆக அறுபத்தைந்தும் அனுமான அளவைக்குக் குற்றங்களாம்' என்பது இச்செய்யுளின் திரண்ட பொருள். அறுபத்தைந்து என்னும் தொகையைக் கணக்கிடும் முறைகளில் சிறுசிறு வேறுபாடுகள் நூல்களிற் காணப்படும்.

## பக்கப் போலிகள்

இவற்றைப் 'பக்ஷாபாசம்' என வடமொழியிற் கூறுவர். பக்ஷம்-பக்கம்; ஆபாசம்-போலி. பக்கமாவது துணி பொருளுக்கு இடம். "இம்மலை நெருப்புடைத்து, புகையுடைமையால்; யாதுயாது புகையுடையது அதுவது நெருப்புடையது, அடுக்களை போல; யாது யாது நெருப்பிலது அதுவது புகையிலது, மடுப் போல" என்னும் தொடரில், துணி பொருளாகிய நெருப்புடைமைக்கு இடம் மலையாதலின், மலை பக்கம். அதற்கு உவமையாக எடுத்துக் காட்டப் பெறும் அடுக்களை சபக்கம். அதற்கு மறுதலையாய்த் துணிபொருளாய நெருப்பில்லாத மடு விபக்கம். பக்கம் தன்மி விசேடியம் என்பன ஒரு பொருட் கிளவிகள். நிகர்பக்கம் சபக்கம் எனவும், நிகரில் பக்கம் விபக்கம் எனவும் படும்.

"மூன்று பக்கம். பக்கம், நிகர் பக்கம்,
நிகரில் பக்கம் என !(த்)
தோன்றும் பக்கம் துணிபொருளுக்
கிடமாம்; உவமை நிகர்பக்கம்;

---

குற்றங்களாகலின் 'மொழிவர்' எனப் பிரிப்பதினும் 'ஒழிவர்' எனக் கோடலே பொருத்தமாம். சுப்பிரமணிய தேசிகர் இங்ஙனமே கொண்டுள்ளார்.

ஆன்ற பொருள்சென் றடையாத
இடமாம் நிகரில் பக்கம்; முதல்
என்ற இரண்டும் பொருளுண்மைக்
கிடமாம்; ஒன்று பொருளின்றாம்.''

துணிபொருட்கு இடனாதலாய பக்கத் தன்மையிற் குறையுடைத்தாயிருப்பினும், ஒரு புடை யொத்துப் பக்கம்போலத் தோன்றுவது பக்கப் போலி என்று பெயர் பெறும். அது காட்சிப்போலி (பிரத்தியட்சாபாசம்) கருதற் போலி (அனுமானபாசம்) துணிபொருட் போலி (பிரதிக்ஞாபாசம்) சொல்லியற்போலி (வசனுபாசம்) என நான்கு வகைப்படும்.

1. காட்சிப் போலி : யாவரும் கண்கூடாகக் கண்டுணர்ந்து வெளிப்படையாக நன்கினிது தெளிந்த பொருளுண்மைக்கு முரண்படக் கூறுவது. 'நெருப்புத் தண்மை யுடையது' என்பது காட்சிப்போலி. இதனைக் 'காண்டல் விரோதம்' எனவும் கூறுவர். 'உப்பு இனிப்புச் சுவையுடையது' என்பதும் காட்சிப்போலி.

2. கருதற் போலி : 'ஒலி நிலைபேறுடையது' என்றல். 'முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது' என யாவரும் கருதி உணரத் தக்க உண்மைக்கு ஒவ்வாது மாறுபடுதலின், இது கருதற் போலி யாயிற்று.

2. துணிபொருட் போலி : இப்பியை வெள்ளியை என்றும், பழுதையைப் பாம்பென்றும், கானலை நீர் என்றும், பிறழ உணர்ந்து துணிவது. பார்வைக் குறைவு முதலிய காரணங்களால் நேர்ந்த பிறழ்வுணர்ச்சியால் ஒரோவழி இங்ஙனம் ஒருவர் துணிய நேரினும், அதனை அவர் மெய்ப்பித்து நிறுவுதல் இயலாதாகலின், துணி பொருட் போலி யாயிற்று.

4. சொல்லியற் போலி : 'அந்தணர் கட்குடிப்பர்' 'ஆசிரியர் பிழைபடக் கற்பிப்பர்' என்றாற் போல்வன. அந்தணராயின் கட்குடியார், கட்குடிப்பராயின் அந்தணராகார். ஆசிரியராயின் பிழைபடக் கற்பியார், பிழைபடக் கற்பிப்பராயின் ஆசிரியராகார் எனச் சொற்கள் ஒன்றனோடு ஒன்று முரணி நிற்றலின், இவைகள் சொல்லியற் போலி யாயின.

'என்தாய் மலடி' என்றலும் பிறவும் சொல்லியற் போலியே யாகும் என்பர்.

'பக்கப் போலிகள் நான்கு' என்பதற்குச் சிவாக்கிர யோகிகள் வேறு வகையில் விளக்கம் கூறுவர். அவர் கூறு மாறு: துணி பொருள் இல்லது (அப்பிரசித்த விசேடணம்) துணி பொருட் டன்மை இல்லது (அப்பிரசித்த விசேடியம்) துணி பொருளும் தன்மையுமாகிய இரண்டும் இல்லது (அப் பிரசித்த உபயம்) துணி பொருளும் தன்மையும் இருந்தும் உடனிகழ் தன்மையில்லது (அப்பிரசித்தா சம்பந்தம்).

1. அப்பிரசித்த விசேடணம் : "வானத் தாமரை மணங்கமழ்வது, தாமரைத் தன்மையால், குளத்தில் மலர்ந்த தாமரை போல" என்புழி, துணி பொருளாகிய வானத் தாமரை யுண்மை யறியப்படவில்லை. பிறவிக்குருடனை நோக்கிப் 'பால் வெண்மை நிறம் உடையது' என்பது அப் பிரசித்த விசேடணம். அப்பிரசித்தம் அறியப்படாதது. விசேடணம் சிறப்பிப்பது.

2. அப்பிரசித்த விசேடியம் : "உயிர் என்றுமுள் ளது, அணுவடிவிற் றாகலின்" என்புழி, துணி பொருளா கிய அணுவடிவம் உயிர்க்கு உண்மை அறியப்பட வில்லை. பிறவிக் குருடனை நோக்கி 'நிறம் அறியத்தகுவது' என்பது அப்பிரசித்த விசேடியம். விசேடியம் சிறப்பிக்கப்படுவது.

3. அப்பிரசித்த உபயம்: "முயற்கோடு மணமுடை யது, நிலத்தின் திரிபாகலின்" என்புழி, துணி பொருளாகிய முயற்கோடும், துணி பொருட் டன்மையாகிய நிலத்தின் திரி புடைமையும் ஆகிய இரண்டன் உண்மையும் அறியப்பட வில்லை. பிறவிக் குருடனை நோக்கி 'மதி நிறம் வெண்மை' என்பது அப்பிரசித்த உபயம். உபயம் இரண்டு.

4. அப்பிரசித்தா சம்பந்தம்: "நிலம் அழிவில்லது, கட்புலனாதலின்" என்புழி, கட்புலனாதலாகிய ஏதுவுக்கும், அழிவில்லது என்னும் துணிவுக்கும் தொடர்புண்மை (வியாத்தி) பெறப்படவில்லை. அசம்பந்தம் தொடர்பின்மை.

அப்பிரசித்தா சம்பந்தமாவது, எதிரி விசேடிய விசேட சம்பந்தம் உணர்ந்து உடம்பட்டுள்ளதனையே துணியுமாறு

பக்கவுறுப்புக் கூறுவது. அஃதாவது, ஒருவனை நோக்கி 'நீ ஆண்மகன்' எனக் கூறுவதும், யானைப் பாகனை நோக்கி 'உன் கையில் இருப்பது தோட்டி' எனக் கூறுவதும் பிறவு மாம் என்றும் சிலர் கூறுவர்.

ஆசிரியர் சீத்தலைச் சாத்தனர் தமது மணிமேகலை நூலின்கண் பக்கப்போலிகள் ஒன்பது எனக் கூறியுள்ளன ராயினும், ஈண்டுக் காட்டியன ஒழிந்து எஞ்சிய ஏனைய ஐந்தும் மறுதலை (விருத்தம்) என்னும் ஏதுப் போலியின்கண் அடங்குமாதலின், ஆசிரியர் அருள்நந்தி சிவனர் 'பக்கப் போலிகள் நான்கு' என்றே கொண்டமைந்தார்.

## ஏதுப் போலிகள்

'துணி பொருளோடு தொடர்பு (வியாத்தி) உடைய தாய்த் துணிபொருளிருக்குமிடத்தில் இருத்தலாகிய ஏது இலக்கணத்திற் குறைபாடுடைத்தாயினும், ஒருபுடையொத்து ஏதுப்போலத் தோன்றுவது ஏதுப்போலி (ஏத்துவாபாசம்)' எனப்படும். அது துணியப்படாதது (அசித்தம்), மறு தலைக்கட் படுவது (விருத்தம்), ஒரு தலைப்படாதது (அநைகாந்திகம்) என மூவகைப்பட்டு விரியான் இருபத் தொன்றும்.

ஏதுப்போலியின் பிரிவுகளாகிய அசித்தம் விருத்தம் அநைகாந்திகம் என்னும் மூன்றையும், ஆசிரியர்கள் வேறு வேறு முறைகளில் விரித்து இருபத்தொன் றுக்குவர். சிவஞானமுனிவர் அசித்தம் 13, விருத்தம் 5, அநைகாந்திகம் 3 என்பர். சிவாக்கிரயோகிகள் அசித்தம் 16, விருத்தம் 1, அநைகாந்திகம் 4 எனக் கணக்கிடுவர். மற்றுஞ் சிலர் அசித் தம் 12, விருத்தம் 2, அநைகாந்திகம் 7 எனக் கூறுவர். இங்ஙனம் ஆசிரியர்கள் தாமே தம்முட் சிறுசிறு கருத்து வேறுபாடுடையராய்ப் பலதிறப் படுதலின், ஈண்டுப் பொது வாக அசித்தம் எனப்படுவன பலவற்றையும் ஒருங்கு தொகுத்துக் கண்டு உணர்ந்துகொள்ளுதல் நலம் பயக்கும். அவைகள் வருமாறு:

(அசித்த வகைகள்)

1. சொரூப அசித்தம்: "ஒலி நிலைபேறிலது, கட்புலனாதலின்" என்புழி, ஏதுவாகிய கட்புலனாதல் என்னும் தன்மை ஒலியின்கண் உண்மை துணியப்படவில்லை.

2. ஆச்சிரய அசித்தம்: "மூலப்பகுதி உள்ளது, அஃது உலகமாக வெளிப்படுதலின்" எனச் சாங்கியர் கூறுகின்றுழி, நையாயிகர் மூலப் பகுதி ஒன்று உண்டென அறியாராதலின், நையாயிகர்க்கு மூலப்பகுதியாகிய ஆச்சிரயம் அசித்தம். ஆச்சிரயம் பற்றுக்கோடு பக்கப் பொருள் தன்மி என்பன ஒரு பொருட் கிளவிகள். "எலி பறக்கும் இயல்புடையது, இறகுடையதாகலின்" என்பதும், "குதிரை இரட்டைக் குளம்புடையது, கொம்புடைமையால், எருதுபோல" என்பதும் பிறவும் ஆச்சிரயா சித்தமேயாம்.

> "ஆச்சிரய அசித்தம்: மாறுனவனுக்கு
> ஏற்ற தன்மி இன்மை காட்டுதல்:
> 'ஆகாசம் சத்த குணத்தால் பொருளாம்' எனின்,
> 'ஆகாசம் பொருள் அல்ல' என்பாற்குத்
> தன்மி அசித்தம்."

என்பது மணிமேகலை.

3. ஆச்சிரய ஏகதேச அசித்தம்: "மூலப் பகுதியும் உயிரும் கடவுளும் நிலைபேறுடையன, பிறிதொன்றனால் தோற்றுவிக்கப் படாமையின்" எனச் சாங்கியர் கூறுகின்றுழி, நையாயிகர்க்குத் துணிபொருளின் ஒரு பகுதி (ஏகதேசம்) ஆகிய மூலப் பகுதி யுண்மை துணியப்படாமல் அசித்தமாம். இதனைப் "பாக அசித்தம்" எனவும் கூறுவர். "உடலும் உயிரும் நிலைபேறில்லாதன, தோற்றுவிக்கப் படுதலின்" என்புழி, தோற்றுவிக்கப்படுதலின் என்னும் ஏது, துணிபொருளின் ஒரு பாகமாகிய உயிரின்கண் பொருந்தாமல் அசித்தமாயிற்று.

4. வியதிகரண அசித்தம்: "ஒலி தோற்றுவிக்கப்படுவது; ஆடை தோற்றுவிக்கப்படுவதாகலின்" என்புழி, துணிபொருளும் ஏதுவும் தொடர்புடையனவாகாமல் வேறுவேறாய் நின்று அசித்தமாயிற்று. வியதிகரணம் வேறிடத்திருத்தல்.

5. விசேடிய அசித்தம் : "ஒலி நிலையிலது, பருப் பொருளாகலின், குடம்போல" என்புழி, விசேடியமாகிய பருப் பொருட்டன்மை ஒலியின்கண் உண்மை துணியப்பட வில்லை.

6. விசேடண அசித்தம் : " ஒலி நிலையிலது, கட் புலனாகும் பண்பாதலின், உருவம் போல " என்புழி, கட்புல னாதலாகிய விசேடணம், ஏதுவாகிய பண்பின்கண் உண்மை துணியப்படவில்லை.

7. உபய அசித்தம் : "குடம் நிலைபேறிலது, பண் பாய்ப் பொறிகட்கு எட்டாததாகலின்" என்புழி, பண்பு என்னும் விசேடணமும், பொறிகட்கெட்டாதது என்னும் விசேடியமும் ஆகிய இரண்டும் துணியப்படவில்லை. உபயம் இரண்டு. "இது புலி வாழ் காடு, புலிக் கொம்புடைமையால்" "இக்கன்று வலியுடையது, கடாப்பால் குடிக்கின்றமையால்" என்பன போல்வனவும் உபயாசித்தமாம். புலிக்கொம்புடை மையும், கடாப்பால் குடித்தலும் ஆகிய ஏதுக்கள் உபயவாதிக ளாலும் உள்ளனவாகக் கொள்ளப்படவில்லை.

"உபயா சித்தம்:
சாதன ஏது இருவர்க்கும் இன்றிச்
'சத்தம் அநித்தம், கட்புலத்து' என்றல்"

என்பது மணிமேகலை.

8. அன்னியதர அசித்தம் : "ஒலி நிலைபேறில் லது, தோற்றுவிக்கப்படுதலின், குடம்போல" என்புழி, ஒலி தோற்றுவிக்கப்படுவது என்னும் கொள்கை மீமாஞ்சகர்க்கு உடன்பாடன்று. அன்னியதரன் இருவரில் ஒருவன். "நாய் தின்றபாலதன்று, தீட்டுடையதாகலின்" என்னும் வைதி கன் கூற்று, அவைதிகனுக்கு உடன்பாடன்றாகலின் அன்னிய தராசித்தமாம்.

"அன்னிய தராசித்தம், மாறாய் நின்றாற்கு
உன்னிய ஏது அன்றாய் ஒழிதல்:
'சத்தம் செயலுறல் அநித்தம்' என்னின்
சித்த வெளிப்பாடு அல்லது, செயலுறல்
உய்த்த சாங்கியனுக்கு அசித்தம்"

என்பது மணிமேகலையின்கண் சீத்தலைச்சாத்தனார் தரும் விளக்கம்.

9. ஏது அஞ்ஞான அசித்தம்: "தேவதத்தன் நிரம்பப் பொருளுடையவன், ஆகூழ் உடையனாகலின், சாரு தத்தனைப் போல" என்புழி, ஆகூழுடைமையாகிய ஏதுவின் உண்மை அறியப்படாமல் அசித்தமாயிற்று.

10. அதிகரண அஞ்ஞான அசித்தம்: "வானத் திற் பரமாணுவானது பொருள்களைப் படைப்பதாகல் வேண் டும், பரமாணுவாதலின், குடத்தைப் படைப்பதாகிய பரமா ணுவைப் போல" என்புழி, பரமாணுவாகையால் என்னும் ஏதுவினால், வானத்திற் பரமாணுக்கள் இடம் பெற்றுள்ளன என்பது அறியப்படாததோடு, அவை பொருள்களைப் படைக்கும் என்பதும் துணியப்படவில்லை.

11. வியாப்பியத்துவ அசித்தம்: "பொருள்க ளெல்லாம் கணப்பொழுதில் தோன்றி மறைவனவாதல் வேண் டும், அசத்தாகலின், நீர்க்குமிழிபோல" என்புழி, அசத்துத் தன்மையாகிய ஏதுவுக்கும், கணப்பொழுதில் தோன்றி மறை வன என்னும் துணிபொருளுக்கும் உடனிகழ்ச்சி (வியாத்தி) யுண்மை துணியப்படவில்லை.

12. ஔபாதிக வியாப்பியத்துவ அசித்தம்: "கருவிலுள்ள குழவி கறுப்பு நிறமுடையதாதல் வேண்டும், அல்லியின் பிள்ளையாதலால், அல்லி என்பவளின் முன்னைப் பிள்ளையைப் போல" என்புழி, உணவு முதலிய உபாதிகளால் குழவி வெண்ணிறமுடையதாதலும் கூடுமாதலின், அல்லியின் பிள்ளை என்னும் ஏதுவுக்கும், கறுப்புநிறம் உடையதாதல் வேண்டும் என்னும் துணிபொருட்கும் வியாத்தியுண்மை துணியப்படவில்லை.

13. வியர்த்த விசேடிய அசித்தம்: "ஒலி நிலைபே றிலது, ஒலித் தன்மையுடைமையாகிய காரியமாதலின்" என் புழி, 'நிலைபேறிலது' என்னும் துணிபொருட்குக் 'காரியமாத லின்' என்னும் ஏதுவே அமையுமாகலின், ஒலித்தன்மை யுடைமை என்னும் விசேடியம் வியர்த்தம் (வீண்) ஆகி அசித்த மாயிற்று.

14. வியர்த்த விசேடண அசித்தம்: "ஒலி நிலை பேறிலது, தோற்றுவிக்கப்படுவதாய் ஒலித்தன்மையுடையதாகலின்" என்புழி, நிலைபேறிலது என்னும் துணிபொருட்குத் 'தோற்றுவிக்கப்படுவதாகலின்' என்னும் ஏதுவே அமையுமாக, 'ஒலித்தன்மையுடையது' என்னும் விசேடணம் வியர்த்தமாய் அசித்தமாயிற்று.

15. சந்திக்த அசித்தம்: "இம்மலை நெருப்புடையது, புகையுடைமையால்" என்புழி, ஆண்டுப் பனிப்படலம் பரவிப் புகைபோலத் தோன்றுமாயின், புகையுண்மையாகிய ஏது சந்தேகத்திற்குரியது (சந்திக்தம்) ஆகி அசித்தமாம். இதனைச் "சித்தாசித்தம்" எனவும் கூறுவர்.

> "சித்த அசித்தம் ஆவது
> ஏது சங்கயமாய்ச் சாதித்தல்;
> ஆவி பனிஎன ஐயுற நின்றே
> தூயபுகை நெருப்புண்டு எனத் துணிதல்"

என்பது மணிமேகலையின்கண் சித்தலைச் சாத்தனர் தரும் விளக்கம்.

16. சந்திக்த விசேடிய அசித்தம்: "கபிலன் இன்றும் அறியாமையுடையவன், மனிதன் மெய்யுணர்வு எய்துதல் இயலாதாகலின்" என்புழி, விசேடியப் பொருளாக உள்ள கபிலன் மனிதனு என்பதும், அவன் இன்றும் அறியாமையுடையவனு என்பதும் ஏதுவினுல் துணியப்படாமல், சந்தேகத்திற்குரியனவாய் அசித்தமாயின.

17. சந்திக்த விசேடண அசித்தம்: "கபிலன் இன்றும் அறியாமையுடையவன், அவன் என்றும் மெய்யுணர்விற் குறைபாடுடையனுகலின்" என்புழி, கபிலனுகிய விசேடியப் பொருளுக்குரிய 'என்றும் மெய்யுணர்விற் குறைபாடுடையவன்' என்னும் விசேடணம் சந்தேகத்திற்குரியதாய் அசித்தமாயிற்று.

18. ஆகம பாதித விடய சாத்திய அசித்தம்: "வேள்வி முதலியன துறக்கத்தை அடைவிப்பன அல்ல, வெறுஞ் சடங்குகளாதலின்" என்பது, வேள்வி முதலியன

துறக்கத்தை அடைவிப்பனவாம் என ஆகமங்கள் கூறுவன வற்றேடு மாறுகொண்டு அசித்தமாம்.

19. உபமான பாதித விஷய சாத்திய அசித்தம்: "கவயமா என்பது பசுவினை ஒப்பதன்று, பொருளாகலின்" என்புழி, ஓராற்ருன் ஒத்து ஓராற்ருன் வேறுபடுவதே உவமானமாகலின், 'கவயமா பசுவினை ஒப்பதன்று' என்பதே 'பசு கவயமாவினை ஒக்கும்' என்பதனை வற்புறுத்தி அசித்தமாம்.

20. அருத்தாபத்தி பாதித விடய சாத்திய அசித்தம்: "நாளுண்டு பிழைத்திருக்கின்ற தேவதத்தன் வீட்டினும் இல்லை வெளியினும் இல்லை, கட்புலனுகத் தோன்ருமையால்" என்புழி, வீட்டிலில்லையேல் வெளியிலிருப்பான் - வெளியிலில்லையேல் வீட்டிலிருப்பான் எனக் கருதியுணரும் அருத்தாபத்தியால், வீட்டினும் இல்லை வெளியினுமில்லை என்னும் சாத்தியம் (துணிபொருள்) அசித்தமாயிற்று.

21. பிரயோசக அசித்தம்: "உலகப் பொருள்கள் வழிவழியே தொடர்ந்து தோன்றுவனவாகும், பொருள்களாகலின்" என்புழி, 'வழி வழியே தொடர்ந்து தோன்றுவன' என்பதனைத் துணிதற்குப் 'பொருள்களாகலின்' என்னும் ஏதுப் பயன்படாததாய் இருத்தலின், அசித்தமாயிற்று. பிரயோசகம் பயன்படுவது. (தொடரும்)

---

# சேக்கிழார் விளக்கும் செம்பொருள்

(இளஞ்சைவப் புலவர்
திரு. S. R. தேமொழி அவர்கள்)

தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமானுக்குப் பலதிறச் சிறப்புக்கள் உண்டு. சேக்கிழார் பெருமானின் வாயிலாகவே நாம் நமது சைவ பரிபாடைச் சொற்களேயும், சிறந்த சம்பிரதாய ஒழுக்கங்களேயும் தெரிந்துகொள்ளப் பெறுகின்றேம். அதுபற்றியே, சேக்கிழார் பெருமானை நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர், ஞானசிரியர் எனப் பலவகையிற் புகழ்ந்து,

“ காடிய விரிநூல் சொற்றிடு திறனல் நன்னூல் ஆசிரியன்
நருபா சுரம்முதல் உரைசெய் தலினல் நவிலுரை யாசிரியன்
நீடிய பாசம யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்
நிலையாற் போத காசிரி யன்இவை நிகழ்தொறும் நிகழ்தோறும்
ஆடிய ஞானத் திறன்உற லால்ஞானு சிரி யனும்நீயென்று
ஆன்றோர் பலரும் புகழப் படுபவ அகிலம் எலாஞ்சென்று
கூடிய புகழ்சால் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி ”

என்று பாராட்டிப் பரவிப் பெருங் கவிஞர் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் பெருமகிழ்ச்சி உறுகின்ருர். சேக்கிழார், திருமுறைகளை நன்கினிது பயின்று உணர்ந்தவர்களுள் தலை சிறந்தவர். திருமுறைகளின் சீரிய செம்பொருள்களை விளக்கும் செயலினும், சேக்கிழார் பெறலருந்திறன் பெற்றவர். இவ்வுண்மையினையும்,

“ அவையகம் வியக்கும்முப் புலவர்அருள் முக்கனி
அருந்தமிழ்ச் சுவையனைத்தும்
ஆராய்ந் தெடுத்துப்பல் செய்யுள் முகமா
அறிய அறிவித்த பெருநாவலன் ”

எனப் பெருங்கவிஞர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் மிக வியந்து போற்றி மகிழ்ந்தருளுகின்ருர்.

சேக்கிழார் பெருமான் தெய்வம் மணக்கும் தமது பெரிய புராணத்தின்கண் பல தேவாரத் திருப்பாடல்களுக்குத் திருவருள் உணர்வுகொண்டு, தமது சீரிய கூரிய நுண் மாண் நுழைபுலம் தோன்ற, அரிய உரிய பொருள் விளக்கங்களைச் செய்தருளுகின்ருர். தமது வாழ்நாள் முழுதும் பெரிய புராணத்தினைப் பயின்றும் பயிலுவித்தும் மகிழ்ந்த பெருமைசான்ற பெருங் கவிஞரேருகிய மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், அவற்றின் அருமை பெருமைகளை எல்லாம் உணர்ந்து, “ நருபாசுரம் முதல் உரைசெய்தலினல் நவில் உரையாசிரியன் ” எனவும், “ முப்புலவர் அருள் முக்கனி அருந்தமிழ்ச் சுவை அனைத்தும் ஆராய்ந்தெடுத்துப் பல் செய்யுள் முகமா அறிய அறிவித்த பெருநாவலன் ” எனவும்

பாராட்டிப் போற்றுதல் இயல்பேயன்றோ ? பாம்பின் கால் பாம்பன்றோ அறியும் ?

சேக்கிழார் பெருமான் செம்பொருள் காட்டி விளக்கம் செய்தருளிய தேவாரத் திருப்பாடல்கள் பலவற்றுள், ஒன்றினைமட்டும் ஈண்டு இச்சிறு கட்டுரையில் குறித்தல் சாலும்.

" மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃ துறும்கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே "

என்னும் தேவாரப் பாடல், சைவ மெய்யுணர்வு சிறிதேனும் உடையார் யாவராயினும், அவரனைவரும் அறிந்ததொன்று. அதனைப் படிக்குங்காலும், பாடுங்காலும் நாம் அனைவரும் பொதுவாகப் பொருளாக எண்ணுவது, ' கழுமலவள நகரின்கண் பெண்ணின் நல்லவளாகிய பெருமாட்டியுடன் பெருந்தகை எழுந்தருளி யிருந்தருளுகின்றார் ; அதனால் நாம் மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம், நமக்கு வைகலும் எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவில்லை' என்பதேயாகும். இவ்வெளிய பொருளைத் தவிர நாம் வேறு பிறிதெதுவும் எண்ணுவதில்லை. இந்தப் பாடல் திருஞானசம்பந்தப் பெருந்தகையால் எப்போது, எங்கு, எந்தச்சூழ்நிலையில் பாடப்பெற்றது? என்பனபோன்ற செய்திகள் குறித்து நாம் சிறிதும் சிந்தனையே செய்வதில்லை. ஆனால் சேக்கிழார் பெருமான் இப்பாடலை நம்போல் எளிய நிலையில் பொருள்கொண்டு அமைந்துவிடாமல், திருஞான சம்பந்தப் பெருந்தகையின் உணர்வினோடு தம்முணர்வும் ஒன்றி இயைந்து நின்று உணர்ந்த அனுபவத்தினைத் தெய்வத் திருவருளால்பெற்று, இத்திருப்பாடல் எப்போது, எங்கு, எந்தச் சூழ்நிலையில் இனிதருளிச் செய்யப்பட்டது என்னும் செய்தியினை, நம்மனோர் உய்யத் தெருட்டி அருளுகின்றார். அத்திறம் அவர்க் கன்றிப் பிறர்க்கும் இயலுங்கொல் !

திருஞானசம்பந்தப் பெருமான் பாண்டி நாட்டில் சிவநெறியைச் செழிப்பித்துத் திருநீற்றொளிபரப்பி, மங்கையர்க் கரசியாரும் குலச்சிறையாரும் மகிழ்ந்து வணங்க, மதுரை

பின்கண் சிலநாள் தங்கியிருந்தார். அப்போது தம் அருமைத் தவப்புதல்வரின் பிரிவைத் தரிக்கலாற்றாத சிவபாத இருதயர், அவரைக் காணுதற்குக் கழிபெரு வேட்கை மீதூர்ந்து, பாண்டிநாடு நோக்கிப் புறப்பட்டு மதுரையைச் சென்று அடைந்தார்.

மதுரையில் திருஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தை வினவித் தெரிந்துகொண்டு தேடியடைந்தார். அங்கிருந்த அன்பர்கள் அவரை வணங்கி வரவேற்று அவர்தம் வரவினைத் திருஞானசம்பந்தருக்கு மகிழ்ச்சியுடன் அறிவித்தனர்.

பெருமான் அதுகேட்டு "எப்பொழுது வந்தருளிற்று?" என வினவி எதிர் எழுந்தருளினார். சிவபாத இருதயர் தாம் முன் தொழுது சென்றணைந்தார். பெருமான் அவரை எதிர் தொழுது மகிழ்ந்தார். உலகியல் தந்தையைக் கண்ட திருஞான சம்பந்தருக்குத் தமது அருளியல் தந்தையின் நினைவு எழுந்தது. தமது "தாயும் தந்தையும்" நலமா? என்று உசாவியறியும் வேட்கை அவர்பால் மிக்கெழுந்தது. ஏனைய உயிர்கட்கெல்லாம் பொதுவாக அம்மை யப்பனாய் விளங்கும் இறைவன், திருஞானசம்பந்தர் திறத்தில் உண்மையிலேயே அம்மை அப்பனாய் எழுந்தருளி இளங்குழவிப் பருவத்திலேயே ஆண்டுகொண்டு தண்ணளி புரிந்தனன் அல்லனோ? அத்தகைய அம்மையப்பரின் நலத்தை வினவியறிய அவருள்ளம் விரைந்தது. அம்மன எழுச்சியால் பெருமான் சிவபாத இருதயரை நோக்கி,

> "அருந்தவத்தீர்! எனைஅறியாப் பருவத்தே எடுத்தாண்ட
> பெருந்தகை,எம் பெருமாட்டி யுடன் இருந்ததே?"

எனத் திருப்பதிகம் போற்றிசைத்தார். அத்திருப்பதிகமே, "மண்ணில் நல்லவண்ணம்" எனத் தொடங்குவதாகும். அத்திருப்பதிகம், இத்தகைய ஒரு பொருந்திய சூழ்நிலையிலேயே இருந்த அருளிச்செய்யப்பட்டது என்பதனைச் சேக்கிழார் பெருமான், "காலம் இடையிட்டவற்றையும், தேயம் இடையிட்டவற்றையும் காணும் ஞானக் கண்" கொண்டு உணர்ந்து நமக்கு உணர்த்தியருளுகின்றார்.

திருஞான சம்பந்தரின் உணர்வோடு, சேக்கிழார் பெருமான் உணர்வும் ஒன்றி இயைந்து நின்று நினைத்திருந்தாலன்றி, இச்சூழ்நிலையை அவர் இனிதுணர்தல் இயலுமோ? சேக்கிழாருக்கு இச்சூழ்நிலையின் பெற்றியுணர்தற்குப் பெரிதும் உதவியது, "பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை யிருந்ததே" எனவரும் ஈற்றடியில், "இருந்ததே" என்னும் சொல்லில் உள்ள ஏகாரமேயாகும். நம்போன்றோர் அவ்வேகாரத்தினை "அசை" என்றோ "பிற" என்றோ, எள்ளித் தள்ளிவிடுவோம். சேக்கிழார் பெருமான் தேவாரத் திருப் பாடல்களின் ஒரு சிறு எழுத்தினையும் பொருளற்றதெனப் புறக்கணிக்க உளம் இசைவரோ! சேக்கிழார் அவ்வேகாரத்தினை வினாப்பொருளில் போந்ததென நுண்ணிதின் உணர்ந்தார். தாம் உணர்ந்து உவந்த அச்செம்பொருளை,

"மண்ணின்நல்ல என்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
உண்ணிறைந்த காதலினால் கண்ணருவி பாய்ந்தொழுக
அண்ணலார் தமைவினவித் திருப்பதிகம் அருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தார்அணிந்த தமிழ்விரகர்"

என்னும் பாடலால் நாமும் உணர்ந்துமகிழ விளக்குகின்றார்.

இதன்கண் "அண்ணலார் தமைவினவித் திருப்பதிகம் அருள்செய்தார்" என, அத்திருப்பதிகக் கருத்தினையே சுருங்கத் தொகுத்துத் திரட்டி யுரைப்பார்போல, அருளிச் செய்திருக்கும் திறம் பெரிதும் இன்புறற்பாலது. ஏகாரம் வினாப் பொருளில் அமைந்தது என்பதனைக் குறிப்பதற்கு "வினவி" என்னும் சொற்பெய்து உணர்த்தியுள்ள அருமைப்பாடும் அனைவரும் வியக்கத் தகுவது. அன்றியும்,

"போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தான்எனை ஆண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையாள் அவளொடும் பெருந்தகை இருந்ததே?"

எனவரும் அத்திருப்பதிகப் பாடலின் கருத்தைத் தழுவி, அதன் பொழிப்புரைபோல, "அருந்தவத்தீர்! எனை அறியாப் பருவத்தே எடுத்தாண்ட பெருந்தகை எம் பெருமாட்டி உடன் இருந்ததே" என அருளிச் செய்திருக்கும் அழகும் நம்ம

னோர்க்கு ஆராப் பெரு விருந்தாய் அமைகின்றது. சேக்கிழார் பெருமான் விளக்கும் இன்னோரன்ன செம்பொருள்கள் பலவற்றையும் தெளிந்துணர்ந்து உய்ய, நாம் அனைவரும் திருவருளை வழுத்துவோமாக.

---

## கூத்தன் கூத்து

(வித்துவான்—அ. சண்முகசுந்தரம், பி. ஏ., கரந்தை)

(மலர் 32 ; இதழ் 7 ; 253-ம் பக்கத் தொடர்ச்சி)

கூத்தனின் திருக்கூத்தைப் பற்றித் திருமூலர் திருமந்திரத்தில்,

"அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன்அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமரும் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே"

என்றும், மனவாசகங் கடந்தாரது உண்மை விளக்கத்தில்,

"தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்றும், குமரகுருபரரது சிதம்பர மும்மணிக் கோவையில்,

"பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னனில வளாகமும்
ஏனைய புவனமு மெண்ணீங் குயிரும்
தானே வகுத்தது னுதமருகக் கரமே.
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே.
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலு
மாற்றுவ தாழ லமைத்ததோர் கரமே.
ஈட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றாட்டுவ தாகுநின் றூன்றிய பதமே.
அடுத்தஇன் னுயிர்கட் களவில் பேரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே"

என்றும் ஒரே கருத்தை விளக்கியுள்ளார்கள்.

இப்பாடல்களில் இறைவனது மூன்று கைகளும், இரண்டு கால்களும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன— இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்கிறான்—வலதுபுற மேற்கையில் துடி அல்லது தமருகம் இருக்கிறது. இது படைத்தலுக்கு அடையாளம். வலதுபுறக் கீழ்க்கை, "அஞ்சேல்" என்று கூறும் அபயக் கையாகும். இது காத்தலுக்கு அடையாளம். இடதுபுற மேற் கையில் தீ (அங்கி) இருக்கிறது. இது அழித்தலுக்கு அடையாளம். ஊன்றிய பாதம் மறைத்தலுக்கு அடையாளம். தூக்கிய பாதம் (குஞ்சிதபாதம்) அருளலுக்கு அடையாளம். இறைவன் உயிர்களின் நன்மையின் பொருட்டே இவ்வைந்து தொழில்களையும் செய்கிறான். அழித்தலும் இறைவனது பேரருளேயாகும். உலகத்தில் இறப்பு நடவா விட்டால் உலகம் எவ்வாறாகும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால் அழித்தல் (சங்காரம்) இறைவனது பேரருளால் நிகழ்வ தென்பது விளங்கும். மேலும் மனவாசகங்கடந்தார் உண்மை விளக்கத்தில்,

"ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம்—கூடும்
மகாம் உதரம் வளர்தோள் சிகாம்
பகருமுகம் வாமுடியப் பார்"

என்றும் கூறுகிறார். இப்பாடல் இறைவன் திருவுருவத்தில் திருவடி, உதரம் (வயிறு), தோள், முகம், முடி ஆகிய ஐந்து உறுப்புக்களிலும் நம் உள்ளத்தைப் பதியவைக்கின்றது. "ந" என்பது மறைப்பு. "ம" என்பது மலம் (ஆணவம், கன்மம், மாயை). "சி" என்பது சிவம். "வ" என்பதுஅருள். "ய" என்பது உயிர். இவ்வைந்து எழுத்துக்களும் சேர்ந்து "நமசிவாய" என்றாகும். இதனை இறைவனது திருவுருவத் தில் காண்கின்றது இப்பாடல். இப்பாடலிலே திருவடி ந (மறைப்பு) என்றும், உதரம் (வயிறு) ம (மலம்) என்றும், தோள் சி (சிவம்) என்றும், முகம் வா (அருள்) என்றும், முடிய (உயிர்) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. சிவவாக் கியர் இக்கருத்தை ஒட்டியே,

"நவ்விரண்டு காலதாய் நவின்ற மவ்வு வயிறதாய்
சிவ்விரண்டுத் தோளதாய் சிறந்த வவ்வு வாயதாய்
யவ்விரண்டுக் கண்ணதாய் எழுந்துநின்ற நேர்மையின்
செவ்வியொத்து நின்றதே சிவாயநம அஞ்செழுத்துமே"

என்று பாடியுள்ளார். வ (அருள்) வாயென்றும், ய (உயிர்) கண்ணென்றும் சிறிது மாற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து "நமசிவாய" என்பது சிவனது திருவுருவம் என்பது விளங்குகின்றது. மனவாசகங்கடந்தார், உண்மை விளக்கத்தில், வேறொரு விளக்கம் கூறுகிறார். இப்போது இறைவனது திருவுருவத்தில் நான்கு கைகளையும் ஊன்றிய பாதத்தையும் கவனிக்க வேண்டும். "சிவாயநம" என்பது இறைவனது திருமேனி என இப்பாடல் கூறுகின்றது.

"சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கிலிறைக்கு
அக்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்"

என்பது பாடல்.

வலது மேற்கையிலுள்ள துடி (உடுக்கை) சி (சிவத்தைக்) காட்டும். இடது கீழ்க்கை வா (அருளைக்) காட்டும். வலது கீழ்க்கை (அபயக்கை) ய (உயிரைக்) காட்டும். தீ இருக்கின்ற இடது மேற்கை ந (மறைப்பைக்) காட்டும். முயலகனை மிதிக்கும் ஊன்றிய பாதம் ம (மலத்தைக்) காட்டும். ஆக இறைவன் திருமேனி "சிவாயநம" ஆகும்.

முற்பாட்டில் இறைவன் திருவுரு அடியிலிருந்து முடிவரை கூறப்பட்டிருக்கிறது. இதில் மேலிருந்து அடிவரை கூறப்பட்டிருக்கிறது. முற்பாட்டில் "நமசிவாய" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இப்பாட்டில் "சிவாயநம" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

"சிவாயநம" என்ற ஐந்தெழுத்தின் மாண்பினை மணிவாசகப்பெருமான்,

"நானேயோ தவஞ்செய்தேன்
சிவாயநம எனப்பெற்றேன்"

என்று கூறியிருப்பதிலிருந்து விளங்கும்.

ஔவையாரும் நல்வழியில்,

"சிவாயநம என்று சிந்தித் திருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும்"

என்று கூறியுள்ளார்.

மனவாசகங்கடந்தார் உண்மைவிளக்கத்தில் வேறொரு பாட்டில்,

"ஓங்கார மேநல் திருவாசி யுற்றதனின்
நீங்கா வெழுத்தே நிறைசுடராம்—ஆங்காரம்
அற்றார் அறிவரணி யம்பலத்தா னாடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்"

என்று விளக்கியுள்ளார்.

திருவாசியே ஓங்காரத்தைக் குறிக்கும் என்றும், ஐந்தெழுத்தே நிறைந்த சோதியாயிருக்கிற இறைவனைக் குறிக்கும் என்றும், இதனை "நான்" என்கின்ற அகங்காரத்தை அற்றவர்கள் அறிவார்கள் என்றும், அழகிய அம்பலத்தான் ஆடலாகிய இதைப் பெற்றவர்கள் பின் பிறப்பற்றவர்கள் ஆவார்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஓங்காரத்தின் பெருமையைத் திருமூலர் திருமந்திரம், திருவாசகம் முதலிய திருமுறைகளிலிருந்தும், சாத்திரங்களிலிருந்தும் அறியலாம். விநாயகர் வழிபாடே ஓங்கார வழிபாடாகும். "The Mystic Aspect of the Tamil Alphabets" (தமிழ் எழுத்து மறை) என்ற திரு. பா. வே. மாணிக்கநாயக்கர் அவர்கள் எழுதிய நூலையாவது, அல்லது மாணிக்கவாசகரது சிவபுராணத்திற்கு மறைமலையடிகள் எழுதிய விரிவுரையையாவது படித்தாலும் ஓங்காரத்தின் மாண்பு விளங்கும். ஆக இந்தப் பாட்டு இறைவன் திருவுருவை "ஓம் சிவாய நம" எனச் சொல்கின்றது.

வேறொரு விளக்கமும் மனவாசகங்கடந்தாரால் உண்மைவிளக்கத்தில் சொல்லப்படுகின்றது.

இறைவனது திருவுருவில் மூன்று கைகளும் இரண்டு திருவடிகளும் இப்போது கவனிக்கவேண்டுவன.

" மாயைதனை உதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதந் தான் "

இப்பாட்டில் வலது மேற்கையினால் மாயையை உதறி, இடதுமேற்கையினால் கன்ம மலத்தைச் சுட்டு, ஊன்றிய பாதத்தால் மலத்தை அமுக்கி, தூக்கிய பாதத்தால் அருள் எடுத்து, வலது கீழ்க்கையினால் (அபயக் கையினால்) ஆனந்த வெள்ளத்தில் ஆன்மாவைத் தான் அமுக்குவதுதான் இறைவனது ஆடலின் கருத்து என்று கூறப்பட்டிருக்கிறது.

இதிலிருந்து மாயை, கன்மம், ஆணவம் ஆகிய மலங்களை நீக்கி இறைவனது அருளொடு ஆனந்தவெள்ளத்தில் மகிழ்வதே இறைவனது ஆடற்கருத்து என்பது பெறப்பட்டது.

இனி, திரு. Dr. சி. பா. ம. சுரேந்திரநாத ஓகளி சூரியா, M. A., B. D., S. T. M., Ph. D, அவர்கள் " நடராஜ தரிசனம்" என்ற நூலின் முன்னுரையில், 1908-ஆம் ஆண்டில் இந்திய நாட்டின் விடுதலைப் போரில் ஐந்தாண்டுகள் சிறைப்பட்டிருந்த போது, ஐந்தாண்டுகளையும் ஐந்து நாட்களாக எண்ணி முழு மனோபலத்துடனும் உடல் பலத்துடனும் வெளிவருவதற்குத் துணைசெய்தது நடராஜ தரிசனம் என்று எழுதியுள்ளார்கள். இந்நூலிற்கு முன்னுரை எழுதிய தமிழ்வேள் திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்களும், மதிப்புரை எழுதிய திரு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களும், திரு. மறைமலையடிகளும், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களும், பிறரும் இந்நூலினைப் பாராட்டியுள்ளார்கள்.

இதில் நீலகண்டன், தலை ஊன், சுடலைஆடி, சம்பார கருத்தா, அம்பலக் கூத்தன், முயலகன், தமருகம் என்ற தலைப்புகளில் கூத்தனின் கூத்தை ஆராய்ந்துள்ளார். விரிக்கிற் பெருகும் என்று அஞ்சி, இவ்வுரைநடை நூலை விரைவில் அச்சிட்டு வழங்கலாமென எண்ணியுள்ளேன்.

இனி, அப்பரடிகள் கூத்தனின் கூத்தைப்பற்றிக் கூறிய பாடலைக் கவனிப்போம்:

" குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே "

என்பது பாடல். இதில் இறைவனது உருவம், வாய், சடை, மேனி, நீறு, எடுத்த பாதம் (குஞ்சிதபாதம்) இவை விளக்கப்பெறுகின்றன. குனித்த புருவம் இறைவன் அருட்பார்வையையும், செவ்வாய் அறமுரைத்த வாயையும், குமிண் சிரிப்பு உலகம் இன்பமயமாயது என்பதையும், பனித்த சடை திங்களையும் கங்கையையும் கொண்ட சடையையும், பவளம்போல் மேனி சோதி வடிவையும், நீறு நீற்றின் மாண்பையும், எடுத்தபாதம் இறைவன் அருள் செய்யும் தன்மையையும் காட்டி மாநிலத்தில் பிறவியின் பயன் கூத்தன் கூத்தைக் காண்பதே என்று கூறுகின்றது இப்பாடல். இங்குச் சிரிப்பு திரிபுரம் எரித்த வீரச் சிரிப்பல்ல. இன்பமாகிய புன்சிரிப்பு. "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்பதைக் காட்டும் புன்சிரிப்பேயாகும். இறைவன் சடையில் கங்கை இருப்பது உலகத்தைத் தன் வேகத்தால் அது அழிக்காமலிருக்கும் பொருட்டேயாகும். கலை குறைந்த திங்களைச் சடையில் வைத்திருப்பதால், இறைவன் காத்தல் தொழில் செய்வது விளங்கும். நீற்றின் மாண்பினை ஞானசம்பந்தர் நீற்றுப் பதிகத்தால் அறியலாம்.

கூத்தனது கூத்தைக்கண்டு எவ்வாறு பெரியோர்கள் மகிழ்கின்றனர் என்பதைச் சேக்கிழார் பெருமான் சுந்தரர் வரலாற்றிலே (தடுத்தாட்கொண்ட புராணத்திலே)

" ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்து சாத்துவிகமே யாக
இந்துவாழ்சடையா னாடும் ஆனந்த வெல்லையில்
தனிப் பெருங்கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா
மகிழ்ச்சியின் மலர்ந்தார் "

என்று பாடியுள்ளார்.

சுந்தரர் கூத்தனைக் கண்டவுடன், பார்க்கின்ற கண்களைத்தவிர, வேறு புலன்கள் தம் கடமையைச் செய்ய வில்லை. பார்த்தவண்ணமே நின்றார். அந்தக்கரணங்களில் சிந்தையே வேலை செய்தது. சாத்துவிகமாகிய ஒரே குணமே நின்றது. சந்திரனைச் சடையில் வைத்திருக்கும் பெருமான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தினால் வந்த பேரின்பமாகிய வெள்ளத்தில் மாறுதல் இல்லாத மகிழ்ச்சியில் நின்றார் என்பது அப் பாட்டின் கருத்து.

தலையாலே கைலையில் நடந்துசென்ற காரைக்காலம்மையார் இறைவனிடம், " அறவா, நீ ஆடும்போது உன் அடியின்கிழ் இருக்க" என்று வேண்டி ஆடும் பெருமான் அடியில் தங்கியதாகச் சேக்கிழார் கூறியுள்ளார்.

இதினின்று உலகிலே கூத்தனைக் காணும் பேறும், அவனிடத்திலே நினைத்து நிற்கும் பேறும் பெறுதற்கரிய பேறுகளென அறிகிறோம்.

தெய்வ நம்பிக்கையைப் பரப்பிவந்த தமிழ்மக்கள் நூல்களால் மட்டுமேயல்லாமல், சிற்பங்களாலும் திருவுருவ அமைப்புகளாலும் எண்ணரிய கருத்துக்களை வற்புறுத்தியாக வழங்கியுள்ளார்களென்பதற்குக் கூத்தப் பெருமானின் திருவுருவத்தை ஓர் எடுத்துக்காட்டாக வைத்து இச் சிற்றுரை எழுதப்பட்டது. இவ்வாறே இறைவன் திருமேனிகள் அமைந்த அனைத்தையும் ஊன்றிப் பார்ப்போமானால் உள்ளத்தைப் பேரானந்தத்தில் அழுத்துவதோடு உலகத்தில் உயர்ந்த பல நன்மைகள் அடையுமாறு செய்யுமென்பது திண்ணம்.

---

# தோழமை

மா. ப. தியாகராஜ முதலியார், B.A.

ஒருவருடைய பெருமையையும் குணத்தையும் அவரவர்களுடைய நண்பரைக் கண்டு சொல்லிவிடலாம் என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. தம்மைவிட மேலானவரிடத்தில் நாம் தோழமை கொள்ள ஆசைப்படுவோம். சிவபெருமான் தமது அடியவர்களிடத்துத் தோழமை கொள்ள வருகிறாரென்றால் அப்படிப்பட்ட அடியவர்கள் பெருமை எப்படிப்பட்டதென நன்குணரலாம். அரசரோடு நட்புக்

கொள்ளச் செய்வது கல்வியென்பதை நாம் பெரியவர்களுடைய சரித்திரங்களினின்றும் காணலாம். குமரகுருபர சுவாமிகள் கல்வி அன்னையைப் புகழ்ந்துபாடும் சகலகலாவல்லி மாலையில் "அரசரோடென்னைச் சரியாசனம்வைத்த தாய்" என்று போற்றுகிறார். சிவபெருமான் "தோழமையாக உமக்கு நம்மைத் தந்தனம்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளை ஆட்கொண்டாரெனின் அவருடைய புலமையே ஒருமுக்கிய காரணமாகும். திருப்புகழில் அருணகிரிநாதர் "கற்ற தமிழ்ப் புலவனுக்குமே மகிழ்வுற்றொருரு பொற்கொடி களிக்கவே போர, கற்பனை நெற்பல அளித்த காரணனருள் பாலா" என்று சுந்தரரைக் குறித்துக் கற்ற தமிழ்ப் புலவன் என்று கூறுவதைக்காணலாம். ஆனால் பண்டைய புலவர்கள் அரசர்களைநாடி ஊதியம் பெற்று வாழ்ந்தனர். செல்வந்தர்களையும் அரசர்களையும் பாடிப்பாடித் தம் வறுமைகளைப் போக்கிக் கொள்ள முடியாத நிலையிலும் பல புலவர்களிருந்ததாகவும் காண்கிறோம். எனவே சுந்தரமூர்த்தி சுவாமிகள் அப்படிப்பட்டவர்களுக்கு ஓர் உண்மையை யெடுத்துக் கூறுகிறார்கள்.

" தம்மையே புகழ்ந்திச்சைபேசினும் சார்வினும் தொண்டர்
தருகிலாப் பொய்ம்மையாளரைப் பாடாதே "

சிவபெருமானைப்பாடினால் "இம்மையே சோறும் கூறையும் தரும். இடர் கெடலுமாம். அம்மையில் சிவலோகமாள்வதற்கு ஐயமில்லை" என்று அறிவுறுத்திப் பாடுகிறார்கள். வாதவூரடிகளின் திருவாசகத்தைக் கேட்டு எழுதிக்கொள்ளப் பாண்டியனிடம் பிரம்படி பட்டார் சிவபெருமான். சுந்தரர் பாடல்களைக் கேட்கப் பரவைபால் ஆரூர்த் தெருவில் மாலும் நான்முகனும் காணாத திருவடி புழுதிதோயத் தூதுசென்றதென்றால், நாம் அப்பாடல்களைப் படிக்கவோ கேட்கவோ முயற்சியின்றி வாளா வாழ்நாளை வீணாகக் கழித்துச் செல்வோமானால் இம்மானிடச்சட்டைதாங்கியதன் பயன்தான்என்னே? தேவார திருவாசகங்களைத் தினம் பாராயணம் செய்து களித்தாலன்றோ சிவபெருமான் அப்பாடல்களை நம்வாயால் கேட்க நம்முடன் தோழமை கொள்ள இரங்கியருள்வார்.

சிவபெருமானிடம் கொள்ளும், நட்பு அழிவற்றது. "அடியேற் கெளிவந்த தூதனைத் தன்னைத் தோழமை யருளித் தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் நாதனை நள்ளாறனை யமுதை நாயினேன் மறந்தென்னினைக் கேனே." நாம் குற்றமிழைப்போமானால் சுற்றமும் நட்பும் நம்மைப் புறக்கணிப்பதைக் காண்கிறோம். சிவபெருமானோ நாம் செய்யும் துரிசுகளுக்குடனாயிருந்து அறக்கருணை யாலோ மறக்கருணையாலோ சீர்திருத்தி ஆட்கொள்கிறான். அப்படிப்பட்ட உண்மையைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம் எடுத்துக் காட்டுகிறது. தாம் நட்புக்கொள்ளும் அடியவரிடத்து வேறு எவரும் பகைமை கொள்ளலாகாது என்று "பரவையாரின் பிணக்கைத் தீர்த்து வைத்தார்" சிவபெருமானார். ஏயர்கோன் கலிக்காம நாயனார் சுந்தரர்பால் கொண்ட பகைமையையும் தீர்த்துவைத்தார்.

எனினும் வேறு எவரும் தம் அடியவர்களுக்கு உதவி புரியச் சிவபெருமான் மனம்பொறார். சேரமானிடம் ஆரூரர் பல பொருள்களைப் பெற்றுவந்தார். ஆனால் அப்பேரடியவரிடங்கூட ஆரூரர் ஒரு பொருளைப் பெறுவதில் சிவபெருமானுக்கு விருப்பமில்லை. அவர் வாங்கிவந்த பொருள்களைத் திருமுருகன் பூண்டிக்கருகில் கொள்ளைகொண்டு பின் அதைத் தாமே வழங்குகிறார்கள். திருவாரூரரை ஆடி மாதம் சுவாதி நன்னாளில் வெள்ளையானையைச் செலுத்திச் சிவபெருமான் கைலைக்கு அழைத்துச் சென்றனர். அப்போது சேரமான் அருகிலில்லை. ஒன்றுபட்ட மனமுடைய நட்பினர்களுக்குள் ஒருவருக்கு நிகழும் பெருமையையோ சிறுமையையோ உணர்ந்துகொள்ளும் இயல்பு அமையும். அப்படிப்பட்ட உட்புல உணர்ச்சியால் ஆரூரர் செலவினை உணர்ந்துகொண்டு பரிமேல் ஏறித் தமது தெய்வ ஆற்றலினால் வானில் வன்றொண்டருக்கு முன்னே வணங்கிச் சென்றார். உலக நீக்கத்திலும் இங்ஙன்றே நட்பைத் தொடர்ந்து காண்கிறோம். இதனை நம்பியாண்டார் நம்பி "ஞான ஆரூரரைச் சேரரை யல்லது நாமறியோம் மானவ யாக்கையொடும் புக்கவரை" என்று பெரிதும் வியந்தார்.

10-8-59 இங்கட்கிழமை ஆடி மாதம் சுவாதி நன்னாள். சுந்தரர் கைலைசேர்ந்த அந்தப் புண்ணியதினத்தில் நம்முடைய பகைமைகளை யொழித்து, பகைவர்களையும் வாழ்த்தி மக்களிடை அன்பாய் வாழ்ந்து சிவபெருமானோடு தோழமை கொண்டு அவர் கேட்டு மகிழ்ந்த தேவாரப் பதிகங்களைப் பாடிச் சிவபெருமானை மகிழ்விப்போமாக.

---

# *சைவ சமயத் தெளிவு-இளைஞருக்கு

(தி. கி. நாராயணசாமி)

1. கடவுள்: [1]ஆகாயத்தில் இரவில் அளவு கடந்த விண்மீன்கள் மின்னுகின்றன. இவை வெகு தூரத்திலே இருத்தலால் சிறியன போலத் தோன்றுகின்றன. ஆனால் இயற்கையில் மிகப்பெரியவை. சூரியன் பூமியிலும் பதின் மூன்று லட்சம் மடங்கு பெரியது. சூரியனைவிட எல்லா விண்மீன்களும் பெரியவை. ஆதலால் இவற்றை மாயையிலிருந்து உண்டாக்கிய கடவுளின் பெருமையை யார் சொல்ல வல்லார்?

இப்படி எண்ணிறந்த பெருமையையுடைய கடவுள் அன்பு வடிவானவர்.[2]

ஆதலால் அவர் நம்பால் கொண்ட அன்பு அளவில்லாதது. பெற்ற தாய், குழந்தையிடம் எவ்வளவு அன்புடையவளாய் இருக்கிறாள். கடவுளுடைய அன்பு தாயினுடைய அன்பினும் பல மடங்கு அதிகமாய் இருக்குமல்லவா? தாயைக் கண்ட குழந்தை எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறது? அப்படி, தாயினும் அன்பையுடைய கடவுளை நினைக்கும் போதும், கோயிலிலே காணும்போதும், நாம் எல்லையற்ற மகிழ்ச்சி அடையவேண்டும். மனம் கரைந்து உருக வேண்டும்.[3] பெற்றோர் குழந்தைக்கு வேண்டிய ஊண், உடை முதலியவற்றை அக்குழந்தை கேளாமலே தரு

---

*சு. சிவபாத சுந்தரம் அவர்கள் எழுதிய சைவ சமய சாரத்தைத் தழுவியது.—தி. கி. நா.

மேற்கோள்: 1. அண்டப் பகுதி. 2. அன்பு சிவம். 3. மெய்தான்.

கிருர்கள். குழந்தைக்கு வேண்டிய யாவும் அவர்கள் அறிய மாட்டார்கள். அவற்றைக் குழந்தை கூறிய பின்பு தருகிருர்கள். ஆனல் கடவுள் எல்லாம் அறிபவர். ஆதலால், நமக்கு வேண்டிய யாவற்றையும் அவர் தாமாகவே தருவர். அவரை ஒன்றும் கேட்கவேண்டியதில்லை. அவரை வணங்குதல், துதித்தல், நினைத்தல், பூசித்தலே செய்யவேண்டியவை.[1]

உடம்பு நம்மோடு எப்போதும் இருப்பதன்று. ஒரு நாளைக்கு நாம் இதைவிட்டு விலகவேண்டி வரும். அப்போது தாய் தந்தையார், சுற்றத்தார், நண்பர்கள் நம்மை விட்டுப் பிரிந்து விடுவார்கள். பொருள்கள் தொடர்பற்றுப் போம். கடவுளே நமக்கு எக்காலத்தும் எல்லையில்லா அன்பைச் செய்துகொண்டு தோன்ருத் துணையாய் நிற்கும் மெய்ப் பொருள்.[2]

ஆதலால் அவரை மனம் நாடுதல் வேண்டும். வாழ்வுக்கு வேண்டும் தொழில்களைச் செய்யும்போது, மனம் அவற்றிலே செல்லுமாயினும், அதன் நாட்டம் எப்போதும் கடவுளிடத்து இடையருது இருத்தல் வேண்டும்.[3] [4]

**2. உயிர்கள் :** என்றும் உள்ளவை. அவற்றின் அறிவை ஆணவம் இயல்பாக மறைத்துக்கொண் டிருக்கிறது. இந்த ஆணவ மறைப்பை நீக்கி நிறைவான மெய்யறிவாம் சிவஞானத்தைக் கொடுத்தற்காகக் கடவுள் உயிர்களுக்கு உடலைக் கொடுத்தருளுகிருர். இந்த உடல் புழு உடல் முதல் மனித உடல் ஈருகப் பல வகைப்படும்.[5]

ஒரு உயிருக்குக் கிடைக்கும் உடலானது, அது அப் போது அனுபவிக்க வேண்டிய வினைவுகளுக்குத் தக்கதாய் இருக்கும். வினைப்பயனை அனுபவித்தால் ஆணவ மறைப்புக் குறையும். ஆதலால் உயிர் எப்பிறவியை எடுத்தாலும், அப் பிறவியிலே அதனுடைய ஆணவ மறைப்பு சற்றுக் குறைந்து மெய்யறிவு சற்று வளரும்.

ஆகவே உயிர்களின் தலைமைத் தொழில் ஆணவ மறைப்பை நீக்கிச் சிவஞானத்தைப் பெறுவதற்கு வேண்டிய

---

1. பால் நினைந்து. 2. ஈன்ருளுமாய்.
3. நாடகத்தால். 4. இரவும் பகலும். 5. புல்லாகி.

முயற்சிகளைச் செய்தலேயாம். சிவஞானம் கடவுளுடைய திருவடிகளே. இதனுல்தான், கடவுளுடைய திருவடிகளை அடைதலே நாம்பிறவி எடுப்பதின் பயன் என்பர் பெரியோர். அத்திருவடிகளைத் தருமாறு கடவுளை வேண்டுகிருர்கள்.1

உயிர்கள் யாவும் அத்திருவடிகளை அடைவதற்கே அதனை நோக்கி ஓயா யாத்திரை செய்கின்றன. வழி நடையாய்த் தல யாத்திரை செய்பவர்கள் காலை மாலை இயன்ற அளவு நடந்து, நண்பகல் இரவு வேளைகளில் தங்கி, சமைத்து உண்டு ஓய்வாய் இருப்பார்கள். கடவுள் திருவடிகளை அடைய நடப்பவர்கள், திருவடி அடைவதை முழு நோக்கமாகவும், ஊன் உறக்கத்தைத் துணையாகவும் கொள்ளல் வேண்டும்.

வழிச் செலவினர் வழக்கம் கூட்டம் கூட்டமாகப் போதல். ஒவ்வொரு கூட்டத்திலும் ஆண், பெண், பெரியார், சிறியார், கற்ருர், கல்லாதார், செல்வர், வறியர் உளர். ஆயினும் யாவரும் இறைவனுடைய அடியார்கள் என்ற கொள்கையினராய், அன்பு, அருள் நிறைந்தவராய், யாத்திரை செய்வர். அவ்வண்ணம் திருவடி அடைய யாத்திரை செய்யும் யாவரும் ஒருவரோடு ஒருவர் மருவி நீதியாய் அன்பாய் வாழ்தல் வேண்டும்.

மாணிக்க வாசகரின் யாத்திரைப் பத்தில் இக்கருத்துள்ள பாடல் காண்க.2 (தொடரும்)

---

## A Request

Will any of our readers in India, Ceylon kindly say whether an English Translation in print is available of H. W. Schomerus's *Der Caiva-Siddhanta eine Mystik Indians*, Leipzig, J. C. Hinrichs-sche Buchhandlung, 1912 and if so where it could be got.

N. MURUGESA MUDALIAR,
*President, Saiva Siddhantha*
1-8-'59. *Maha Samajam, Madras.*

---

1. ஒருவனே. 2. தாமே தமக்கு.

சைவ சித்தாந்த மகா சமாஜ மாதாந்தர வெளியீடு

## "சித்தாந்தம்"

சைவ சமய உண்மைகளைப் பற்றி எடுத்துக்காட்டும் சிறந்த கட்டுரைகள் சைவப் பெருமக்களால் இந்தப் பத்திரிகையில் எழுதப்படுகிறது. மக்கள் நல்ல வண்ணம் வாழ்வதற்குச் சமயத்தைப் பின்பற்றிய வாழ்க்கையே வேண்டற்பாலது. ஞாலமிசை ஆலவாயண்ணல் புகழ் ஓங்கி அவனருளால் உலகத்தில் அருளும் அமைதியும் உண்டாக்க வேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்துடன் 52 ஆண்டுகளாக வெளியிடப்படும் இப்பத்திரிகையைப் பலரிடையும் பரப்புவது சைவமக்கள் கடமையாகும். சமாஜஅங்கத்தினர்கள் இப்பொறுப்பை மேற்றுச் செல்லும் வாயெல்லாம் சித்தாந்தத்தைப் படிக்கும் அன்பர்களைப் பெருக்கி இக்காலத்திற்கு இன்றியமையாத சமயப்பணி ஓங்கச் செய்யவேண்டுமென்பதே எமது விண்ணப்பம். சமாஜத்திற்கு ஆண்டு ரூ. 3/- மூன்றுமட்டும் செலுத்தச் "சித்தாந்தம்" அவர்கள் வீட்டிற்கு வந்துவிடும்.

(Sd.) திரு. நல். முருகேச முதலியார், B.A.,

(சைவ சித்தாந்த மகா சமாஜத்) தலைவர்.

---

## செய்திகள்

திருமயிலைச் சைவ சமயப் பிரசார சத் சங்கத்தின் சார்பில் "திருத்தொண்டர் புராணம்" திரு. பாலூர் - சண்ணப்ப முதலியார், பி.ஓ.எல். அவர்களால் கபாலீச்சர ஞான மண்டபத்தில் 24 உபந்நியாசங்களால் பூர்த்திசெய்யப்பட்டு 31-7-59 வெள்ளிக்கிழமையன்று மாலை 6 மணிக்குத் திரு. ம. சி. சம்பந்த முதலியார் (கபாலி டாகிஸ் மானேஜர், திருமயிலை) அவர்கள் தலைமையில் பாராட்டு விழா நடைபெற்றது. திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் சத் சங்கத்தின் கருத்திற்கிணங்கப் புராணிகர் அவர்களுக்குச் "செந்தமிழ்ப் புலவர்" என்ற பட்டம் வழங்கிப் பாராட்டுரை வழங்கினார்கள். அப்

பாராட்டுரையில் சைவர்கள் கோழைத்தனமாக இல்லாமல் சிறுத்தொண்டரைப்போல், போர்முனையிலும் நின்று சமயக் கேடு விளைவிக்க முன்வரும் எவற்றையும் தகர்க்க முன்வர வேண்டும். தற்போது சமயங்களைப் பாதுகாக்க மக்கள் முயல வில்லையானால் பிற்காலம் என்ன அல்லல்களைக் காணக்கிடக் குமோ என முன்கூட்டி நினைந்து, சமயப் பிரசாரங்கள் ஏழை மக்கள் இல்லங்கள்தோறும் சென்று நிகழ்த்தவேண்டு மென்று கூறினார்கள்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் திரு. பால சுப்பிரமணிய பக்தஜன சபையின் (குகானந்த நிலையத்தில்) திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள் தலைமையில் 19-7-59 ஞாயிற்றுக்கிழமை மாலை வித்வான் பிச்சபிள்ளை (ஆர்ட்ஸ் கல்லூரிப் பேராசிரியர்) அவர்கள் மாணிக்கவாசகருடைய சரித்திரமும், அவரியற்றிய திருவாசகம் திருக்கோவையார் நூல்களின் அருமை பெருமைகளைப் பற்றியும் விரிவாகப் பேசினார்கள். வாதவூரர், சிதம்பரத்தில் ஐக்கியமான ஆனி மக நினைவு நாளாக அத்தினம் சமாஜத்தாரால் கொண்டாடப் பெற்றுக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

திருவலிதாயம் என்னும் திவ்யக்ஷேத்திரம் சென்னைக்கு அருகாமையில் பாடி என்னும் பெயரால் இப்போது வழங்கப் பட்டு வருகிறது. திருஞானசம்பந்த சுவாமிகளால் அத் தலம் பாடப்பெற்றுள்ளது. அருணகிரி நாதரும் அங்கு ஒரு திருப்புகழ் பாடியுள்ளார்கள். அங்கு 2-8-59 ஞாயிற் றுக்கிழமை மாலை 6 மணிக்கு, சென்னை தருமை ஆதீன சமயப் பிரசார நிலையத்தின் சார்பில் சமயப்பிரசார வழிபாட் டுக் கூட்ட விழா நடைபெற்றது. சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் அங்கத்தவர்களும், பால சுப்பிரமணிய பக்தஜன சபையினர்களும் இவ்விழாவில் கலந்துகொண்டனர். அவ் வாலய தர்மகர்த்தர் திரு. A. N. பரசுராமன், M.A. அவர்கள் தலைமையில், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் அவர்களும், திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. ச. சிவகுமாரன் எம். ஏ. அவர்களும் மற்றும் சிலரும் சொற்பொழிவாற்றினார்கள்.

அடுத்த மாதக் கூட்டம் 13-9-59 ஞாயிற்றுக்கிழமை திருப்பாசூர் (திருவள்ளூர்க்கருகிலுள்ளது) என்னும் க்ஷேத்திரத்தில் நடைபெறும்.

சுந்தரர் விழா சமாஜத்தாரால் 10-8-59 திங்கட்கிழமை மாலை கபாலீச்சரத்தில் கொண்டாடப்பெறும். —செயலாளர்.

முருகன் ஆடி விழா : கொழும்பு ஜெயந்தி நகர் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலின்கண் மிகவும் சிறப்புற (19-7-59) நடைபெற்றது. அவ்விழாவின் சார்பில், மதுரை யாதீனம் ஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையில், திருமுருக கிருபாநந்த வாரியார் அவர்களின் கந்தபுராண விரிவுரைகளும், மதுரை மாரியப்பசுவாமிகள், காஞ்சிபுரம் ஆ. விநாயக முதலியார் ஆகியவர்களின் இன்னிசை யரங்குகளும், மைசூர் டி. சி. சுந்தர மூர்த்தி அவர்களின் புரவி நாட்டியமும் பெருஞ் சிறப்புற நடைபெற்றன. இவற்றிற்கெல்லாம் காரணமான தெட்சணத்தார் வேளாளர் மகமைப் பரிபாலன சங்கத்தாரின் சமயத் தொண்டுகள் பெரிதும் பாராட்டற்பாலன.

பெரியபுராண விரிவுரை நிறைவு விழா : ஆரணி கன்னட வீரசைவ சைனிக அன்பர்களின் ஆதரவில் காஞ்சிபுரம் திரு. பொன்னுசாமி அடிகளால் ஓராண்டாக நடைபெற்று நிறைவெய்தியதனை ஒட்டி, 12, 13, 14-7-59 மூன்று நாட்களும் திருமுறை மாநாடு நிகழ்ந்தது. ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான், முதுபெரும் புலவர் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், சைவப்பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை ஆகிய மூவரும் முறையே தலைமை தாங்கினர். திருவாளர்கள் - சி. அருணை வடிவேல் முதலியார், செ. வேங்கடராமச் செட்டியார், வீ. திருஞானசம்பந்த முதலியார், சோ. அறுமுக முதலியார், எம் ஏ.; பி.டி., வே. ஐபா நாயக்கர், சி. துரைசாமி ஐயர், கோ. இனியபெருமாள் முதலியார், கோ. வரதராச ஐயர், சி. பொன்னுசாமி அடிகள், வே. சிவசுப்பிரமணியம் ஆகிய அறிஞர் பெருமக்கள் பலர் சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர்.

———

# வாழ்த்துப்பா*

முருகனடி மறவாத நல்லன்பர்! சைவ
முதற்றன்மை யாம்அடக்க வடிவான பண்பர்!
பெருமைமிகு தமிழ்ப்பெரியர் **திரு.வி.க.** பெரிதும்
பெட்புற்றுத் துணையாகக் கொண்டபெருந் தகையர்!
உருவளரும் **சாதுஅச்சுக் கூட**மதை உண்மை
உருவாக இருந்துநடத் திடுகின்ற தக்கார்!
அருமைநெறி யாஞ்சைவ **சித்தாந்தம்** ஓம்பும்
அரிதுயர்நம் **சமாஜத்தின்** நெடுநாள்நற் றொண்டர்! (1)

திருத்தமுடன் " **சித்தாந்தம்** " இதழினைப்பல் லாண்டாச்
சிறந்தகட னாக்கொண்டெவ் வாசிரியர் வரினும்
பெருத்தபொறுப் பெடுத்துதவி வெளியிட்டுத் துணையா
சிரியரெனப் பிறங்கியதற் கன்னரே மிகவும்
பொருத்தமென அமைக்குநிலை செய்தவர்; ச மாஜம்
புகழ்வளர்த்த அடக்கவிலைப் பதிப்புகட்கு மேலாய்
விருப்பமுடன் பணிசெய்த புண்ணியர்! நம் **நாரா
யணசாமி**ப் பேர்முதலி **யார்**தகுதி மிக்கார்! (2)

அன்னவர்தம் நல்வாழ்க்கைத் துணைவிஅஞ்ச லாட்சி
**அ**ம்மையவர் செல்வமகன் **அ**ண்ணாம லைப்பேர்
துன்னுமுயர் குணன்! எம்.ஏ. வரைபயின்று **பட்டித்
தோகைத்தீனை**யின் கண்காணிப் பாளர்பணி செய்யும்
நன்னயன்! இல் வாழ்வதனை மேற்கொளஆர்க் **காட்டு
நற்பால சுந்தரனார்** புதல்வி**அம்பி காவை**
இன்னியங்கள் முழங்கிடப்பல் லான்றோர்கள் வாழ்த்த
இனியதிரு மணம்புணர்த்தி மகிழ்ந்தனர்பெற்றோர்கள்!

---

* " சித்தாந்தம் " துணையாசிரியரும், சமாஜச் செயற்குழு உறுப்பினரும், சென்னை, சாது அச்சக நிர்வாகியுமான திரு மு. நாராயணசாமி அவர்களின் புதல்வன் செல்வன்: **நா. அண்ணாமலை**, எம். ஏ., ஆர்க்காடு-தோல்ஷாப் - திரு. A. P. பாலசுந்தர முதலியார் அவர்களின் இளைய புதல்வி செல்வி: **அம்பிகாவை**, 13—7—59-ல் ஆர்க்காட்டில் திருமணம் புரிந்ததையொட்டி, 16—7—59-ல் சென்னை இராயப்பேட்டையில் நிகழ்ந்த வரவேற்பின்போது சைவசித்தாந்த மகாசமாஜத்தினர் வாசித்தளித்தது.

நல்லறமாம் இல்லறத்தில் புகுகின்ற இந்த
　　நற்றுணைவர் வள்ளுவரின் மறைவழியை நாடி
வல்வகையில் வாழ்ந்துயர்ந்த மகப்பேறு பெற்று
　　வண்மையுடன் பண்புமிக மகிழ்ந்தென்றும் ஒன்றிச்
செல்வமுதற் பன்னலமும் சிறந்தவுடல் நலமும்
　　செழுங்கிளையும் நட்புமுடன் தங்குமுயர் குணமும்
நல்வகையிற் பெற்றுப்பல் லாண்டுநனி வாழ்க!
　　நாடுமொழி நெறியோம்பிப் பீடுபெற வாழ்க! (4)

(வெண்பா)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு)
ஐம்புலத்தா(று) ஓம்பி அகமகிழ்க!—நன்புலமே
நாடிஅன் றுமலேயும் நங்கைஅம்பி காவும்பல்
கோடியெனும் வாழ்நாட்கள் கொண்டு. (5)

---

## புத்தக விலைப்பட்டி

| | | ரூ. | ந.பை |
|---|---|---|---|
| பெரியபுராணம் | ... | 3 | 00 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறை | ... | 0 | 75 |
| திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி - சமாஜப் பொன்விழா வெளியீடு | ... | 1 | 00 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 | 50 |
| முருகன் மூந்நூல் உரையுடன் | ... | 0 | 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 | 00 |
| சிவஞான போதம் (எளிய உரை) | ... | 0 | 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 | 06 |
| அறுபத்துமூவர் | ... | 0 | 06 |

தபாற்கூலி, பதிவுச் செலவு வேறு.

| | | |
|---|---|---|
| திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி(உரையுடன்) | 0 | 05 |
| ,, நூறு பிரதிகள் பதிவுத் தபாற்கூலியுள்பட | 6 | 25 |

**சைவ சித்தாந்த மகா சமாஜப் புத்தக விற்பனை அலுவலகம்,**
**23, இராமகிருஷ்ண மடத்துச் சாலை, மயிலாப்பூர், சென்னை—4.**

# மதிப்புரைகள்

1. **வாகீசர் அல்லது மெய்யுணர்தல்**: சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள் (கோவை "சிவக்கவிமணி" அவர்கள்) "மாணிக்கவாசகர் அல்லது நீத்தார் பெருமை" என்னும் சிறந்த நூலை முன்பு எழுதியதுபோல, இது போழ்து இவ்வரிய நூலை இயற்றி யளித்துள்ளார்கள். திருநாவுக்கரசரின் வரலாற்றைப் பத்துப் பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு, பத்துக் குறள்களோடும் பொருத்திக் காட்டியுள்ள திறம் பெரிதும் மகிழ்தற்பாலது. பெரிய புராணத்திற் சிறிதும் பிறழாது செல்லும் வரலாறும், செய்யுட் கற்பனை விளக்கங்களும், வரலாற்றுப் பகுதிகளால் அறியப்பெறும் உயரிய உண்மைகளும், இடையிடையே தெரிந்தெடுத்த சிறந்த பெரியபுராண - தேவாரப் பாடல்களும், வேறு பிற இனிய மேற்கோட் செய்யுட்களும், கற்பார்க்குக் கழி பெருஞ் சுவை பயப்பனவாகும். திருமுனைப்பாடி நாட்டின் ஐந்திணை வளங்களை விளக்கியிருக்கும் பகுதி முதலியன பெரிதும் போற்றற்பாலன. இடையிடையே விளக்கப்பெற்றுள்ள சாத்திர நுணுக்கங்களும், சரிதச் சான்றுகளும் நூலுக்கு மிக்க சிறப்பினை யளிக்கின்றன. இந்நூலை நன்கினிது அழுந்திப் பயிலுபவர் சிறந்த தமிழறிவும், சிவநெறியுணர்வும் எய்துவர் என்பதில் ஐயமில்லை. திருப்புகலூர்த் திருக்கோயிற் சார்பில் இந்நூல் வெளிவரக் காரணர்களாய்த் திகழ்ந்த அறங்காவலர்கள் திரு. எம். டி. தியாகராஜ பிள்ளை எம்.எல்.ஏ., திரு. இராதாகிருஷ்ண நாயுடு முதலிய பெருமக்களுக்குத் தமிழகம் பெரிதும் கடப்பாடுடையது. பக்கம் 170; விலை 1-50.

திருக்குறளின் 'மெய்யுணர்தல்' எனும்சிறந்த அதிகாரக்
கருத்தையெல்லாம் தூய'சிவக் கவிமணி'யாம் பெருஞ்சான்றோர்
அருத்தியுற 'வாகீசர்' அரியவர லாற்றின்கண்
பொருத்திமிகத் தெளிவித்தார். அவர்தொண்டின் புகழ்பெரிதே!

—**முருகவேள்**

2. **திருப்புகலூர்த் தல வரலாறு**: சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறையின் சார்பில் வெளி

வரும் "திருக்கோயில்" இதழாசிரியரும், நமது சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் செயற்குழு உறுப்பினருமாகத் திகழும் திரு. ஜி. கலியாணம் பிள்ளை, M.A., D. Econ. அவர்களால், இந்நூல் திருந்திய முறையில் செவ்விதின் ஆராய்ந்து எழுதப்பெற்றுள்ளது. திருக்கோயில் அமைப்பு, மூர்த்தி தலம் தீர்த்தச் சிறப்புக்கள், திருவிழாக்கள், புராணச் செய்திகள், சிற்ப ஓவியங்கள், திருப்பணிகள், கோயில் ஆட்சிநிலை முதலியன நன்கினிது விளக்கப்பெற்றுள்ளன. தலத் திருப்பதிகங்கள், திருப்புகலூர் அந்தாதி, கல்வெட்டு அறிக்கைகள் என்பனவும் சேர்க்கப்பட்டுள்ளன. திருநாவுக்கரசர், முருக நாயனார், கலியாணசுந்தரர், அக்கினி பகவான் முதலிய அழகிய திருவுருவப் படங்கள் கண்கவர் வனப்பினவாய் நூலின் சிறப்பை மிகுதிப் படுத்துகின்றன. பக்கம் 102; விலை ரூபா ஒன்று.

3. **திருநாவுக்கரசர் திருவடிப் புகழ்மாலை :** திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத் தலைவர் சிவசேனாபதி திரு. பி. டி. எஸ். குமாரசாமிச் செட்டியார் அவர்களின் நினைவாக, அவர்தம் அருமைத் தம்பியார் திரு. பி. டி. எஸ். சிங்காரஞ் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது. இதனைத் தொகுத்தளியவர் குடந்தை நகராட்சிப் பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் திரு. சுவர்ண காளீச்சுரன் அவர்கள் ஆவர். கும்பகோணத் தல வரலாறு, பழையாறைத் தல வரலாறு, சிவபூசை அகவல், சைவானுட்டான அகவல், ஸ்ரீ தட்சிணாமூர்த்தி திருவருட்பா போன்ற வேறுபிற பல நூல்களையும், தக்க பெரியவர்களின் துணைகொண்டு திரு. சுவர்ணகாளீச்சுரன் அவர்கள் வெளியிட்டுள்ளார்கள். அவர்தம் தமிழ்த் தொண்டும் சிவத்தொண்டும் பெரிதும் பாராட்டற்பாலன.

—முருகவேள்

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.